| | | |
|---|---|---|
| **சஞ்சிகைத்தலைப்பு** | : | **கோவில் கலைகள் தமிழ் ஆய்விதழ்** |
| **Title of the Journal** | : | **Tamil Journal of Temple Studies** |
| **பதிப்பாசிரியர்/Edior-in-Chief** | : | **முனைவர் கி. நாகேந்திரன்/Dr. Nagendran** |
| **பதிப்பு / Edition** | : | தொகுதி – 1, இதழ் 1, நவம்பர் 2020/VOLUME – 1, ISSUE - 1, November 2020 |
| **பக்கங்கள்/Pages** | : | 61 |
| **விலை/Price** | : | 500 |
| **ஐஎஸ்எஸ்என் எண்/ISSN Number** | : | Applied |


## பதிப்பாசிரியர்/Editor-in-Chief



### இணைப் பதிப்பாசிரியர்கள்/Associate Editors



### ஆசிரியர் குழு/Advisory Editorial Board

**திருமதி புனிதா சுப்பிரமணியம்**
தலைமையாசிரியர், எஸ்.ஜே.கே.டி. லடாங்
அல்லாகர், 34800 ட்ராங் பெராக்
மலேசியா.
மின்னஞ்சல்: kashnitha@gmail.com,
punitha.su@moe.edu.my

**Ms. Punitha Subramaniam,**
Head Master,
SJKT Ladang Allagar,
34800 Trong, Perak, Malaysia.
Email: kashnitha@gmail.com,
punitha.su@moe.edu.my

**முனைவர் அ.பாக்கியமுத்து,**
தலைவர் & இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
திருவள்ளுவர் கல்லூரி, பாபநாசம், தென்காசி
மாவட்டம்,
தமிழ்நாடு, இந்தியா.
மின்னஞ்சல்: packiamuthupackiamuthu@gmail.com

**Dr.A. Packiamuthu,**
Head & Associate Professor,
Department of Tamil,
Thiruvalluvar College, Papanasam,
Tenkasi,
Tamilnadu, India.
Email: packiamuthupackiamuthu@gmail.com

**திரு சு.குழந்தைவேல்,**
தலைவர் & உதவிப்பேராசிரியர், ஆங்கிலத்துறை,
கணேசர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
மேலச்சிவபுரி,
புதுக்கோட்டை மாவட்டம்,
தமிழ்நாடு, இந்தியா.
மின்னஞ்சல்: english.kulandhai@gmail.com

**Mr. S. Kulandhaivel,**
Assistant Professor, Department of English,
Ganesar Arts and Science College, Melasivapuri-622403,
Pudhukkotai District
Tamil Nadu, India.
Email: english.kulandhai@gmail.com

**திரு போ.செந்தில்குமார்,**
உதவிப்பேராசிரியர், ஆங்கிலத்துறை,
அழகப்பா அரசு கலைக்கல்லூரி,
காரைக்குடி,
சிவகங்கை மாவட்டம்-630003,
தமிழ்நாடு, இந்தியா.
மின்னஞ்சல்: skbosesk@gmail.com

**Mr. B. Senthil Kumar,**
Assistant Professor, Department of English,
Alagappa Govt. Arts College, Karaikudi, Sivaganga-630003,
Tamil Nadu, India.
Email: skbosesk@gmail.com

**டினோசா சுஜீந்தர்**
துணை விரிவுரையாளர்,
வரலாற்றுத்துறை,
ஜாப்னா பல்கலைக்கழகம்,
ஸ்ரீலங்கா
மின்னஞ்சல்: dinosha14@hotmail.com

**Dinosha Sujindar,**
Assistant Lecturer,
Department of History,
University of Jaffna,
Sri Lanka
Email: dinosha14@hotmail.com

**முனைவர் செ.சாந்தி,**
கௌரவ விரிவுரையாளர், வரலாற்றுத்துறை
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-630003,
தமிழ்நாடு, இந்தியா.
மின்னஞ்சல்:drbsr178alu@gmail.com

**Dr.S.Shanthi,**
Guest Faculty, Department of History,
Alagappa University, Karaikudi-630003,
Tamilnadu, India.
Email: drbsr178alu@gmail.comz

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**Tamil Journal of Temple Studies is *an Internationally Peer-Reviewed Journal*** published twice in a year on November and March, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. **Tamil Journal of Temple Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Temple Studies. Research through this academic medium motivates in all aspects of main and inter-disciplines of the core area of study with authentic e-publication. Making Internationalization of Temple Studies in the globalized world aids the scholarly community to gather knowledge on Temple arts and architecture and the related fields to it. The impudence and revelation of academic research on internet could foster green printing and open access nature in the domain research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of culture and tradition and the unification of the people in our world. In achieving the aim, our journal **Tamil Journal of Temple Studies** has been created**.**

## Disclaimer

**Tamil Journal of Temple Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime done to the original author. So, the authors are advised to follow academic ethics with respect to acknowledgment of quotations from other scholarly works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions must be original, must accompany the declaration form stating the research paper as an original work, and has not been published elsewhere for any academic or research purpose. The contributor will be liable for such lapses on any legal issues and publication ethics. **Contact** int.jou.oftemplestudies@gmail.com for submission and other information. See https://tamiljournaloftemplestudies.wordpress.com/ for guidelines. For Institutional Subscription contact the publisher.

## Message from the Editor-in-Chief

**Tamil Journal of Temple Studies** is *an Internationally Peer-Reviewed Journal* which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas in the field of Temple studies. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal to bring down scholarly articles to the academic world of Arts and Architecture.

**PUBLISHER:** D. Maheswari,
3/350, Veterinary Hospital Back side,
Virudhunagar – 626001.
Mobile: 8526769556
Mail: int.jou.oftemplestudies@gmail.com

# பொருளடக்கம் / Contents



கோவில் கலைகள் தமிழ் ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் பன்னாட்டு ஆய்விதழ்



**Tamil Journal of Temple Studies**

*An Internationally Peer-Reviewed Journal*

**E-ISSN: Applied** **Vol. 1: Issue - 1, November 2020**

**Available at:** https://tamiljournaloftemplestudies.wordpress.com/

# வள்ளலாரின் இறைநெறிச் சிந்தனைகள்

# The Divine Thoughts of Vallalar

**த.குருநாதன்,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, பூம்புகார்க் கல்லூரி, மேலையூர் – 609107.

**D.Gurunthan** Ph.D Research Scholar, Department of Tamil, Poompuhar College, Melaiyur-609107.

**ORCiD**: https://orcid.org/0000-0003-3532-4454

**முனைவர் நா.சாந்தகுமாரி**, உதவிப்பேராசிரியர் & ஆய்வு நெறியாளர், தமிழ்த்துறை,

பூம்புகார்க் கல்லூரி, மேலையூர் -609107.

**Dr.N.Santhakumari,** Assistant Professor of Tamil & Research Supervisor, Poompuhar College, Melaiyur-609 107.

**ORCiD**: https://orcid.org/0000-0002-7912-7981

DOI: 10.5281/zenodo.4271408

## Abstract

*Vallalar is one of the most famous benefectors in tamilnadu. He has gives more details in his 'Thiruvarutpa' songs explained of God and the divine norms. He realized the fact that there is only one deity. Vallalar says that religion is related to Gos. The old and ancient features of Saivism revered as the mother religion. This own God called "Lord Shiva" is worshipping all over the world. Its proposal Love is God is an acceptable reality to all the people. This Lord Shiva also called "Attamoorthy", "Engunathan", doing "five fold matier", "Ammiyappar" and "Eternal light". Such nature has been worshiped as a god since ancient times. Vallalar's theology is based on attribute of nature and reveals five elements of nature and its philosophies.Mainly Vallalar considered 'Light' to be the lord is natural and naturalistic. This article examines his vision of nature and its uniqueness, as well as its ability to bring together the lord who helps us to act.*

**Keywords:** God, Nature, Five elements of nature, Light, Religion, Vallalar, Thiruvarutpa.

## முன்னுரை

தமிழகம் கண்ட பேரருளாளர்களுள் ஒப்பற்ற ஒருவர் வள்ளலார். திருவருட்பா பாடல்களில் இறைவனைப் பற்றியும் இறைநெறிகளையும் வள்ளலார் விளக்கியுள்ளார். தெய்வம் ஒன்றுதான் என்னும் உண்மையை உணர்த்தியவர், சமயம் என்பது இறைவனோடு தொடர்புடைது என்றும் கூறுகிறார்.பழமையும் தொன்மையும் வாய்ந்த

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020
Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

சைவ சமயம் தாய்ச்சமயம் என போற்றப்படுகிறது. இச்சமயக் கடவுள் சிவன் எந்நாட்டவருக்கும் இறைவனாய் விளங்குகின்றான். அன்பே சிவமாய் விளங்குவதால் அனைத்து மக்களும் ஏற்கத்தக்கப் பரம்பொருளாய் காட்சிதருகிறான். இத்தகைய இறைவன் அட்டமூர்த்தியாய், எண்குணத்தனாய், ஐந்தொழில் புரிபவனாய், அம்மையப்பனாய், அருட்பெருஞ்ஜோதியாய் விளங்குகின்றான். வள்ளலாரின் இறைநெறிச் சிந்தனைகளைப் பற்றி இக்கட்டுரை ஆய்கிறது .

**இறைவன் ஒருவனே**

இறைவன் ஒருவனே என்னும் உண்மையினை 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' **(திருமூலர், 2000, திருமந்திரம், பா.2104)** என்னும் திருமூலர் வாக்காலும், 'ஒருவன் என்னும் ஒருவன் காண்க' **(மாணிக்கவாசகர், 1949, திருவாசகம், திருவண்டப்பகுதி, அடி.43)** என்னும் திருமுறை தொடரும் மெய்ப்பிக்கின்றன. இங்ஙனம் ஒன்றெனக் கொள்ளப்பட்ட பரம்பொருளை இனங்காணுதலும் இடம்பெறுகின்றது.

கடவுள் ஒருவரே என்பது இராமலிங்க வள்ளலாரின் முதன்மையான இறைக்கோட்பாடு ஆகும். வள்ளலார் பல தெய்வவழிப்பாட்டைக் கண்டிக்கிறார். கடவுள் ஒருவரே. அவரை ஜோதி வடிவில் வழிபட வேண்டும் என்பதே அவர் முடிந்த முடிவான கடவுட்கொள்கை.

**தெய்வங்கள் பலபல சிந்தை செய்வாரும்**
**சேர்கதி பலபல செப்புகின் றாரும்**
**பொய்வந்த கலைபல புகன்றிடு வாரும்**
**பொய்ச்சம யாதியை மெச்சுகின் றாரும்**
**மெய்வந்த திருவருள் விளக்கமொன் றில்லார்**
**மேல்விளை வறிகிலார் வீண்கழிக் கின்றார்**
**எய்வந்த துன்பொழித் தவர்க்கறி வருள்வீர்**
**எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பந்தந் தீரே**

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020
Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

**(திருஅருட்பா, ஆறாம் திருமுறை,பா.961)**

என்ற அவருடைய திருவருட்பாப் பாடலால் இதனை அறியலாம்.

முழுமுதற் பொருளாகிய கடவுள் ஒன்று இருத்தல் வேண்டும். உடம்பொடு காணப்பெறும் உயிர்த்தொகுதியினை, ஓர் வரையறையுடன் காணப்படும் இவ்வுலக இயக்கமாகிய காரியத்தினை அடிப்படையாகக் கொண்டு இதற்கு நிமித்த காரணமாகிய முழுமுதற் பொருளொன்று உண்டு எனத் துணியலாம்

வள்ளலார் தாம் பாடிய பதிவிளக்கத்தின் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் ‘திருச்சிற்றம்பலம் தனிலே தெய்வம் ஒன்றே கண்டீர்’ எனப்பாடி பரம் பொருள் ஒன்றே என்று உணர்த்தியுள்ளார். மேலும் அவர்,

**ஒன்றும் அலார் இரண்டும் அலார் ஒன்றிரண்டும் ஆனார்**
**உருவும்அலார் அருவும்அலார் உருஅருவம் ஆனார்**
**அன்றும்உளார் இன்றும்உளார் என்றும் உளார் தமக்கோர்**
**ஆதியிலார் அந்தமிலார் அருட்பெருஞ்சோ தியினார்**
**என்றுகனல் மதிஅகத்தும் புறத்தும் விளங்கிடுவார்**
**யாவும்இலார் யாவும்உளார் யாவும்அலார் யாவும்**
**ஒன்றுறுதாம் ஆகிநின்றார் திருச்சிற்றம்பலத்தே**
**ஓங்குகின்ற தனிக்கடவுள் ஒருவருண்டே கண்டீர்**

**(திருஅருட்பா, ஆறாம் திருமுறை,பா.25)**

என்றும் பாடியுள்ளார். உடம்பிற்கு எவ்வாறு உயிர் ஒன்றோ அதுபோல உலகிற்கு இறைவன் ஒன்றே என்பதை,

**உருவ ராகியும் அருவின ராகியும் உருஅரு வினராயும்**
**ஒருவ ரேஉளார் கடவுள்கண் டறிமினோ உலகுளீர் உணர்வின்றி**
**இருவ ராம்என்றும் மூவரே யாம்என்றும் இயலும் ஐவர்கள் என்றும்**
**எருவ ராய்உரைத் துழல்வதென் உடற்குயிர் இரண்டுமூன் றெனலாமே**

**(திருஅருட்பா,ஆறாம் திருமுறை, பா.1627)**


கோவில் கலைகள் தமிழ் ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் பன்னாட்டு ஆய்விதழ்



Tamil Journal of Temple Studies
An Internationally Peer-Reviewed Journal
E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020
Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

என்ற பாடலிலும் எடுத்துரைத்துள்ளார்.

எந்த பொருளுக்கும் எந்த உயிர்க்கும் உள்ளும் புறமும் சத்தி, சித்து ஆனந்தமயமாக நடிக்கும் உண்மைப்பொருள் ஒன்றே. அது சிவம் எனப்பெறும். இந்த மெய்மையைத் தான் கண்டறிந்தவராக வள்ளலார் கூறுகின்றார். இதனை,

**எப்பொருட்கும் எவ்வுயிர்க்கும் உள்ளகத்தும் புறத்தும்**
**இயலுண்மை அறிவின்ப வடிவாகி நடிக்கும்**
**மெய்ப் பொருளாம் சிவம் ஒன்றே என்றறிந்தேன்.**

**(திருஅருட்பா,ஆறாம் திருமுறை, பா.2534)**

என்கிறார்.

**எண்குணத்தன்**

இறைவன் தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல் முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களில், நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பில் இன்பமுடைமை எனும் எண்வகைக் குணங்களையுடையவன். **(பரிமேழலகர், 2000, திருக்குறள் -9,** இவ்எண்குணங்களையுடைய இறைவனை வள்ளலார்,

**எண்குணமா சத்தி இந்தச் சத்திதனக் குள்ளே**
**இறையாகி அதுஅதுவாய் இலங்கிநடம் புரியும்**
**தன் கருணைத் திருவடியின் பெருமைஅறி வரிதேல்**

**(திருஅருட்பா, ஆறாம் திருமுறை,பா.1135)**

என்று குறிப்பிடுகின்றார்.

**அட்டமூர்த்தி**

இறைவன் உறையும் இடங்கள் எட்டு. அவை அட்ட மூர்த்தம் எனப்படும். வேதங்கள் முதலாக திருவருட்பா வரை இதனைக் கூறுகின்றன.

**அட்டமூர்த்தியானோன் (திருஅருட்பா, முதல் திருமுறை,பா.2)**

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020
Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

**அட்டமூர்த்திமதாகிய பொருளை (திருஅருட்பா, இரண்டாம்திருமுறை, பா.815)**

என்பன வள்ளலார் திருவருட்பா.

**ஐந்தொழில்**

உயிர்களை உய்யக் கொள்வதற்கென அவன் செய்யும் தொழில்கள் ஐந்தாம் (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்). இறைவன் கொள்ளும் திருவுருவங்களில் கூத்தப் பெருமானின் திருவுருவத்தை வைத்து இவ்வைந்தொழில் இயற்றுதலைப் புலப்படுத்துவர். இறைவன் இயற்றும் நடனங்கள் மூன்றாம். அவை ஊனநடனம், ஞான நடனம், ஆனந்த நடனம் என்பன.

இருளில் மூழ்கிக் கிடக்கும் உயிரை உய்விக்கும் பொருட்டு இறைவன் ஐந்தொழில்களைப் புரிகின்றான் இறைவன்.

**ஆக்கல் ஆதிய ஐந்தொழில்"(திருஅருட்பா, இரண்டாம் திருமுறை,பா.1300)**

**இவ்வைந்தொழில் பஞ்சகிருத்யம் என்று சொல்லப்படும்.**

**ஐந்தொழில் நான் செய்ய எனக்கருள் புரிந்தாய்**

**(திருஅருட்பா, ஆறாம் திருமுறை, பா.1255)**

**ஐந்தொழில் நான் செயப்பணித்தாய் (திருஅருட்பா, ஆறாம் திருமுறை,பா. 1260)**

என்னும் பாடல்கள் விளக்கும்.

**அம்மையப்பர்**

இறைவன் அம்மையப்பனாய்ப் பிரிவற நின்றே உலகினைப் படைத்துக் காத்து, அழித்து, மறைத்து, அருள் புரிகின்றான் என்பது,

**அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்பர் என்றறிக**

**அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் - அம்மையப்பர்**

**எல்லா வுலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்**

**அல்லார்போல் நிற்பர் அவர் (திருக்களிற்றுப்படியார்,பா.1)**

என வரும் பாடலால் அறியலாம்.

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020

Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

தொன்றுதொட்டுத் தமிழ் முன்னோர்களால் வழிபடப் பெற்றுவரும் மாதொரு பாகனாகிய இறைவனது தொன்மைக் கோலத்தினை உளங்கொண்ட திருவருட்பிரகாச வள்ளலார்,

**திருவிளங்கச் சிவயோக சித்தியெலாம் விளங்கச்**

**சிவஞான நிலைவிளங்கச் சிவானுபவம் விளங்கத்**

**தெருவிளங்கு திருத்தில்லைத் திருச்சிற்றம் பலத்தே**

**திருக்கூத்து விளங்க ஒளி சிறந்த திருவிளக்கே**

**உருவிளங்க உயிர்விளங்க உணர்ச்சியது விளங்க**

**உலக மெலாம் விளங்க அருள் உதவு பெருந்தாயாம்**

**மருவிளங்கு குழல் வல்லி மகிழ்ந்தொருபால் விளங்க**

**வயங்குமணிப் பொது விளங்க வளர்ந்த சிவக்கொழுந்தே**

**(திருஅருட்பா, ஆறாம் திருமுறை, பா.2)**

என வரும் திருப்பாடலில் தில்லையம்பலப்பெருமானை அம்மையப்பராகப் பரவிப் போற்றியுள்ளார்.

**அருவம், அருவுருவம், உருவம்**

இன்னதன்மையன் என்பது சுட்டிக்காட்ட வொண்ணாத தன்மையுடைய இறைவன், உயிர்களை ஈடேற்றம் செய்வதற்காக மூவகை நிலையில் நின்றருள் புரிகின்றான். இத்தன்மையினை அருவம், அருவுருவம், உருவம் என மூவகையாக ஞான சாத்திரங்கள் குறிப்பிடுகின்றன.

இயல்பாகவே பாசத்தளையிலிருந்து நீங்கியவன் பரம்பொருளாகிய சிவன். அருவத் திருமேனியுடைய பொழுது சிவன் எனவும், உருவத்திருமேனியுடைய பொழுது மகேசுவரன் எனவும் கூறுவர். இத்தகைய திருமேனிகளை,

**உருவினதாய் அருவினதாய் உருஅருவாய் உணர்வாய்**

**உள்ளதுவாய் ஒருதன்மை உடையபெரும் பதியாய்**

**(திருஅருட்பா, ஆறாம் திருமுறை, பா.652)**

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020

Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/


**உருவமும் அருவமும் உபயமும் ஆகிய**

**அருள்நிலை தெரித்த அருட்பெருஞ்ஜோதி**

**(திருஅருட்பா, அருட்பெருஞ்ஜோதி அகவல், அடி.317-318)**

**ஒன்றும்அலார் இரண்டும் அலார் ஒன்றிரண்டும் ஆனார்**

**உருவும்அலார் அருவும்அலார் உருஅருவும் ஆனார்**

**(திருஅருட்பா, ஆறாம் திருமுறை, பா.25)**

உயிர்களின் வினைமாசு நீங்குதற் பொருட்டு அவன் கொள்ளும் வடிவுகள் ஒன்பதாம். அவை சிவம்,சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேசுவரன், உருத்திரன், மால், அயன் என்பனவாம். இவற்றும் முதலன நான்கும் அருவாம். பின்னைய நான்கும் உருவாம். இடைப்பட்ட ஒன்று அருவுருவமாம். அவன் உயிர்களை உய்யக் கொள்ளுதற்கெனக் கொள்ளும் அருள்நிலையே சத்தி என்பதாகும். அவ்வருட்சத்தியும், இவ்ஒன்பது நிலைகளுக்கேற்ப ஒன்பது நிலைகளில் நிற்கும். அவை சிவம், சத்தி, நாதம், விந்து, மனோன்மணி, மகேசை, உமை, திருமகள், நாமகள் என்பனவாம். **( சிவஞானசித்தியார் சுபக்கம், பா.165)**

**அருட்பெருஞ்ஜோதி**

'அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி' என வரும் இத்தொடரையே திருவருட்பிரகாச வள்ளலார் தாம் பரப்ப எண்ணிய சுத்த சன்மார்க்கத்திற்குரிய மந்திர மொழியாக அறிவுறுத்தியுள்ளார்.

வள்ளலார் கடவுளின் இயற்கை விளக்கமே அருள் என்பார். இந்த அருட்பெருஞ்ஜோதி வடிவமே இறைவனின் உருவாகும். எந்தச் சமயமும், எந்த மார்க்கமும் காணாத ஒரு இறைவழிபாடே அருட்பெருஞ்ஜோதி வழிபாடாகும். அதனால் ஒளியை வழிபட்டார். வள்ளலார் ஜோதியின் பெருமையைக் கூறும்போது,

**ஊன உடம்பே ஒளிஉடம்பாய் ஓங்கி நிற்க**

**ஞான அமுதெனக்கு நல்கியதே வானப்**

**பொருட் பெரும் ஜோதிப் பொதுவில் விளங்கும்**

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020

Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

**அருட்பெருஞ்ஜோதி அது**

**(திருஅருட்பா, ஆறாம் திருமுறை,பா.1331)**

எனப் பாடி பரவசமடைகிறார்.

**முடிவுரை**

சமயம் என்பது இறைவனோடு தொடர்புடையது. சைவ சமயக்கடவுளாகிய சிவன் எண்குணத்தனாய், அட்டமூர்த்தியாய், அம்மையப்பனாய், ஐந்தொழில் புரிகின்றான். அவன் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் விளங்குகின்றான். அவனது திருமேனி அரு, அருவுருவம், உருவம் என்னும் மூவகை நிலைகளில் அமைந்துள்ளது. இறைவன் ஆன்மாக்களின் அகத்தில் சுடர்விட்டு விளங்கும் ஜோதியாய்த் திகழ்கின்றான். எந்த சமயமும், எந்த மார்க்கமும் காணாத ஒரு இறைவழிபாடே அருட்பெருஞ்ஜோதி வழிபாடாகும்.

**மேற்கோள்நூல்கள்**

[1] திருமூலர், திருமந்திரம், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள், 2000.

[2] இராமலிங்க அடிகளார், திருவருட்பா, இரண்டாம்பதிப்பு, வள்ளலார் தெய்வநிலையம், வடலூர். 2002.

[3] அருள்நந்தி சிவாசாரியார்,சிவஞானசித்தியார் சுபக்கம், 1997. ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்.

[4] திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், திருக்களிற்றுப்படியார், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்,1983.

[5] மாணிக்கவாசகர், திருவாசகம், ஞானசம்பந்தர் பதிப்பகம், தருமபுரம், 1949.

[6] பரிமேலழகர், திருக்குறள், தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2000.

**References**

[1] Thirumoolar, Thirumanthiram,Sri Kasimutt, Thiruppanandal. 2000.

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020
Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

[2] Ramalinga Adigalar, Thiruvarutpa, Second Edition, Vallar DeivaNilayam, Vadalur, 2002.
[3] Arulnandhi Sivachariyar, SivaZhana Sithiyar Subakkam, Sri Kasi Mutt, Thiruppanandal. 1997.
[4] Thirukadavur Uyyavantha Devanayanar, Thirukallittrupadaiyar, Sri Kasi Mutt, Thiruppanandal, 1983.
[5] Maanikkavasagar, Thiruvasagam, Zhanasambandhar Pathipagam, Dharumapuram, 1949.
[6] Parimelazhagar, Thirukkural, Tamil University, Thanjvavur. 2000.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி** /Author Contribution Statement: இல்லை /NIL
**கட்டுரையாளர் நன்றியுரை**/Author Acknowledgement**:** இல்லை **/Nil**
**கட்டுரையாளர் உறுதிமொழி** /Author Declaration**: இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./**I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



 கோவில் கலைகள் தமிழ் ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் பன்னாட்டு ஆய்விதழ்



**Tamil Journal of Temple Studies**

*An Internationally Peer-Reviewed Journal*

**E-ISSN: Applied** **Vol. 1: Issue - 1, November 2020**

**Available at:** https://tamiljournaloftemplestudies.wordpress.com/

# சிவன் வழிபாட்டில் அருவம்

# Aruvam in the worship of Shiva

**முனைவர் செ.சாந்தி,** கௌரவ விரிவுரையாளர், வரலாற்றுத்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி-3

**Dr.S.Santhi,** Guest Faculty, Department of History, Alagappa University, Karaikudi-3

**ORCiD**: **https://orcid.org/0000-0001-6965-2478**

**DOI:** 10.5281/zenodo.4271422

## Abstract

*A lingam sometimes referred to as linga or Shiva linga, is an abstract of the Hindu deity Shiva in Shaivism. It is typically the primary murti or cult image in Hindu temples dedicated to Shiva, also found in smaller shrines, or as self-manifested natural objects. Saivism prescribe certain practices to grow spiritually. These practices are called Sariya, Kiriya, Yoga and Jnana. Sariya is doing service to devotees and in temples. Worshipping lord Siva with body and mind is Kiriya. Meditating on Siva without allowing the mind to stray outwards and getting united mentally with Him is Yoga. Understanding the books of wisdom and staying in the Grace of Siva is Jnanam. The Saiva siddhantha further says, God Siva in His inherent form is formless. To bestow grace to the souls He manifests in various forms. His manifested forms are grouped into three categories. They are arupa (Aruvam) form (without a body), rupa (uruvam)form (with body) and rupa-arupa (aruvuruvam) form (with and without body). This worship is one of the specialties found in Avudaiyarkoil in Pudukkottai district of Tamil Nadu. Worships such as Aruvam and Aruvuvam Uruvam are generally classified separately from the Linga worship. Therefore, this article is designed to highlight the significance of the worship of Lord Shiva only after first describing the data on the antiquity of Linga worship.*

**Keywords:** Aruvam, worship, Shiva

## ஆய்வுச்சாரம்

சிவன் வழிபாடு என்பது அருவம், அருவுருவம், உருவம் என சைவ சமயக் கோட்பாடுகளில் வகைப்படுத்தப்படுகின்றன. இதில் அருவம் வழிபாட்டின் தொன்மையானது உருவமற்ற வழிபாடாக குறிப்பிடப்படுகின்றது. இவ்வழிபாடானது இலிங்கம் அல்லாமல் ஆவுடையை மட்டுமே இறைவனாக நினைத்து ஆன்மாவாக வழிபடப்படுகின்றது. இவ்வழிபாடானது தமிழகத்தில் புதுக்கோட்டை மாவட்டத்தில்


கோவில் கலைகள் தமிழ் ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் பன்னாட்டு ஆய்விதழ்



**Tamil Journal of Temple Studies**
*An Internationally Peer-Reviewed Journal*
**E-ISSN: Applied** **Vol. 1: Issue - 1, November 2020**
**Available at:** https://tamiljournaloftemplestudies.wordpress.com/

உள்ள ஆவுடையார்கோயிலில் காணப்படுவது சிறப்பிற்க்குரிய ஒன்றாகும். பொதுவாக இலிங்க வழிபாட்டில் இருந்து தான் அருவம், அருவுருவம் உருவம் போன்ற வழிபாடுகள் தனித்தனியாக பிரித்து வகைப்படுத்தப்படுகின்றன. ஆதலால் முதலில் இலிங்க வழிபாட்டின் தொன்மையைப் பற்றியத் தரவுகளை விவரித்தப் பின்னரே சிவனின் அருவம் வழிபாட்டின் சிறப்பினை எடுத்துரைக்கும் விதமாக இக்கட்டுரையானது அமையப்பெற்றுள்ளது.

இந்தியாவில் இலிங்க வழிபாடு என்பது பண்டைக் காலந்தொட்டே மக்களின் வழிபாட்டில் வழக்கத்தில் இருந்து வந்துள்ளன என்பதை பல வரலாற்றுச் சான்றுகளின் மூலம் அறிய முடிகின்றன. இதைப்போல மேலை நாடுகளான ஆசியா, ஐரோப்பா, எகிப்து, சீனா, ஜப்பான் போன்ற நாடுகளிலும் இலிங்க வழிபாடு வழக்கத்திலிருந்ததை அகழ்வாராய்ச்சி சான்றுகளின் மூலம் காணக்கிடைக்கின்றன. உரோமர்களும், கிரேக்கர்களும் இலிங்கத்தை பிரியாபஸ் என பெயரிட்டு வணங்கி வந்துள்ளனர். மேற்குப் போர்னியாவில் பொன்னால் செய்யப்பட்ட ஓர் லிங்கம் கிடைக்கப்பெற்றது என்பதுக் குறிப்பிடத்தக்கது. வேதங்கள் ரிக், யஜீர், சாம, அதர்வணம் என நான்கு வகைப்படுகின்றன. ஒவ்வொரு வேதங்களிலும் மந்திரம் அல்லுத சம்ஹிதை பிராமணம், ஆரண்யகம், உபநிடதம், எனும் பிரிவுகளும் உள்ளன. இவற்றில் ரிக் வேதத்தில் 75 இடங்களில் உருத்திரன் என சிவனைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் தங்களது கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர்.

சார்லஸ் எலியிட் என்பவர் திராவிட இந்தியா என்ற நூலில் ஆரியர்கள் வழிபடும் உருத்திரன் என்ற கடவுள் திராவிட மக்களின் கடவுள் என்றும் உருத்திரன் என்பதற்கு சிவந்தவன் என்றும் இதனை சிவன் என்ற பெயரின் மொழிபெயர்பே என்று கூறுகிறார். ஸ்டிபன்சன் என்பவர் வேதங்களில் சிவன் என்ற பெயர் காணப்படவில்லை என்றும் சிவன் தமிழரின் கடவுள் என்றும் குறிப்பிடுகின்றார். இதனையே கில்பேட் கிலாட்டர் என்பவர் இலிங்க வழிபாட்டை ரிக் வேதம் இகழ்ந்துக் கூறுவதால் வேத காலத்துக்கு முன்பே சிவவழிபாடு திராவிடர்களிடையே வளர்ச்சியடைந்திருந்தது எனக் கூறுகிறார்.

**E-ISSN: Applied** **Vol. 1: Issue - 1, November 2020**

**Available at:** https://tamiljournaloftemplestudies.wordpress.com/

T.A.கோபிநாதராவ் என்பவர் இலிங்க வழிபாட்டின் தொன்மை என்பது ரிக்வேதத்திலிருந்து அறியப்படுகின்றது என்றும் ரிக்வேதம் இலிங்கத்தை சிசுன தேவன் என குறிப்பிடுகிறது என்றும் கூறுகிறார். ரிக் மற்றும் அதர்வண வேதங்களில் ருத்ரன் என்னும் பெயரில் குறிப்பிடப்படும் சிவன் மனிதர்களுக்கும், விலங்கினங்களுக்கும் மரணத்தை அளிப்பவர் எனக் கூறுகின்றது. அதர்வண வேதத்தில் பாவன்சகஸ்ரமாடு, மகாதேவர், பசுபதி, உக்ரன், ஈசானம் என குறிப்பிடப்படும் பெயர்கள் ருத்ரன் எனும் பெயரிலேயே அழைக்கப்பட்டுள்ளன. மேலும் சிவலிங்கம் குறித்து இவர் விளக்கும்போது பிரதானம் என்பது இலிங்கம் என்றும், இலிங்கத்தில் உறைபவர் என்றும், ஆவுடை என்பது உமை என்றும் இலிங்க புராணத்தை மேற்கோள்காட்டி குறிப்பிட்டுள்ளார்.

சாம வேதம் ஆயுர்வேதத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் ஓரிடத்தில் மட்டும் உருத்திரனைப் பற்றிக் குறிப்பிடப்பெற்றுள்ளது. யஜீர் வேதத்தில் உருத்திரன் மலையில் வசிப்பவன், சிவப்பன், நீலகண்டன், ஆயிரங்கண்ணுள்ளவன், பசுக்களின்பதி, முதல்வன் என்றெல்லாம் குறிப்பிடுகின்றது. மேலும் பண்டைக்காலத்தில் இறந்தோர்களை புதைக்கும் போது அவர்களின் நினைவாக நடுகல் வைத்து வணங்கும் வழக்கும் இருந்துள்ளது. அவ்வழக்கம் தியானத்திலும், யோகத்திலும், வீரத்திலும் சிறந்து விளங்கியவர்களின் நினைவாக நடுகல் வைக்கும் பழக்கம் லிங்க வழிபாடாக இருந்திருக்கலாம் என்பது அறிஞர்கள் கருதுகின்றனர் என்பதுக் குறிப்பிடத்தக்கது. பிராமணங்களான சதபதப் பிராமணங்களில் உருத்திரனின் வலிமையைப் பற்றி கூறுகின்றன. உபநிடதங்கள் உருத்திரனை அரண், மகாதேவன் எனக் குறிப்பிடுகின்றது. இதிகாசங்களான மகாபாரதத்திலும், இராமாயணத்திலும் கிருஸ்ணன் இராமனைப் பற்றிக் கூறினாலும் சிவவழிபாட்டையும் உயர்த்திக் கூறுகின்றன. மகாபாரத்தில் கிருஸ்ணனும், அர்ச்சுனனும் சிவபெருமானை வழிபட்டுப் பாசுபத அஸ்திரம் பெற்றதையும், இராமாயணத்தில் ராமனால் ராமேஸ்வரத்தில் லிங்கம் வழிபட்டதையும் கூறுகின்றது. சிந்து சமவெளி நாகரிகக் காலத்தில் மொகஞ்சதாரோப் பகுதிகளில் கண்டெடுக்கப் பெற்ற பசுபதி முத்திரையானது சிவனின் வழிபாடாகவும், ரிக் வேதத்தில்

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020

Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

குறிப்படப்பெறும் ருத்ரன் சிவனைக் குறிக்கும் சொற்களாகவும் கருதப்படுகின்றது. இருந்தப்போதிலும் இதற்கானச் சான்றுகள் கிடைத்திருந்தாலும் கூட இவ்வழிபாட்டிற்கான ஆரம்ப காலம் என்பது இன்றும் பலக்கருத்து வேறுபாடுகள் ஆய்வாளர்களிடையே இருக்கவே செய்கின்றன.

சிவன் என்றால் தமிழில் சிவந்தவன் என்றும். வடமொழியில் சிவம் என்றும் மேலும் முதுமுதல்வன், ஈர்ஞ்சடை அந்தணன், காரியுண்டிக் கடவுள், ஆலமார் கடவுள், முக்கண்ணன், முக்கட்செல்வன், கறைமிடறு, மணிமிடறு, காரி உண்டிக் கடவுள் என்றும் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பெற்றுள்ளன. சிவலிங்கம் அஷ்ட லிங்கங்கள் என்று அழைக்கப்படுகின்றன. அவை இந்திரலிங்கம், அக்னி லிங்கம், எமலிங்கம், ஈசான்யலிங்கம், நிருதிலிங்கம், வருணலிங்கம், வாயுலிங்கம், குபேரலிங்கம் என்ற எட்டு லிங்கங்களும் அஷ்டலிங்கம் என அழைக்கப்படுகின்றன. மேலும் லிங்கத்தை சலலிங்கம், அசலலிங்கம் எனவும் குறிப்பிடுகின்றன. முத்து, பவளம், வைடூரியம், படிகம், மரகதம், நீலம், மாணிக்கம், வைரம், கோமேதகம் இரத்தினங்கலாளகன லிங்கங்களும் காணப்படுகின்றன.

- சுயம்பு இலிங்கம் - தானாய் தோன்றிய இலிங்கம்.
- தேவி இலிங்கம் - தேவி சக்தியால் வழிபடப்பட்ட இலிங்கம்.
- காணஇலிங்கம்-சிவமைந்தர்களான ஆனைமுகத்தவராலும், ஆறுமுகத்தவராலும் வழிபடப்பட்ட இலிங்கம்.
- தைவிக இலிங்கம் - மும்மூர்த்திகளான பிரம்மா, திருமால் மற்றும் உருத்திரன் ஆகியோராலும், இந்திரனாலும் வழிபடப்பட்ட இலிங்கம்.
- ஆரிட இலிங்கம் - அகத்தியர் போன்ற முனிவர்களால் வழிபடப்பட்ட இலிங்கம்.
- இராட்சத இலிங்கம் - இராட்சதர்களால் பூசை செய்யப்பட்ட இலிங்கம்.
- அசுர இலிங்கம் - அசுரர்களால் பூசை செய்யப்பட்ட இலிங்கம்.
- மானுட இலிங்கம் - மனிதர்களால் பூசை செய்யப்பட்ட இலிங்கம்.

லிங்கமானது ஆவுடையிலிருந்து மேல்நோக்கி பிரம்மபாகம், விஷ்ணுபாகம், ருத்ரபாகம் என ஒரே அமைப்பில் மூன்று அங்கங்களாக பிரிக்கப்படுகின்றன. இவற்றில் பிரம்மபாகம் திருவுண்ணாழி தளமட்டத்திற்குக் கீழேயும், விஷ்ணுபாகம் தளமட்டத்திற்கு மேல் ஆவுடையார்குள்ளும் மறைந்திருக்கும், மூன்றாவது கூறாகிய

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020

Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/


ருத்ரபாகம் ஆவுடையார்குள்ளும் மேல் மட்டத்திலிருந்து ஓங்கியும் நிற்கும். இங்ஙனம் வெளியேத் தெரியும் பாகம் பூஜாபாகம் என்றும், பூஜாம்சம் என்றும் சொல்லப்படும் ஆவுடையார் பகுதி சக்தி என்றும் லிங்கம் சிவன் என்றும் இந்த சிவசக்தியின் இணைப்பால் உலகம் தோன்றின என்னும் தத்துவத்தை சிவலிங்கம் உணர்த்துகிறது.

இவற்றில் லிங்க வழிபாடானது அருவம், அருவுருவம், உருவம் என வகைப்படுத்தப்படுகின்றன. இதில் பூவாம்சம் என்றுக் குறிப்பிடப்படும் ஆவுடையார் பகுதியை மட்டும் பிரதிஸ்டை செய்து வழிபடப்படும் முறையானது அருவ வழிபாடாகக் குறிப்பிடப்படுகின்றன.

**அருவம்**

கண்ணுக்கு புலனாகாது ஆவுடையை மட்டும் கொண்டு நிட்களத் திருமேனியாக அமையப்பெற்றுள்ளது.

**அருவுருவம்**

சிவலிங்க வடிவம் சகள நிட்களத் திருமேனியாகக் காட்டப்பெற்றுள்ளது..

**உருவம்**

கண்ணுக்குப் புலப்படும். சகளத் திருமேனி எனவும் இவற்றுள் உமா மகேசுவரர், தட்சிணா மூர்த்தி, நடராசர் போன்ற உருவங்கள் அடங்கும்.

இதனை பெரிய புராணம்:

காணாத அருவினுக்கும்
உருவினுக்கும் காரணமாய்
நீள்நாகம்அணிந்தார்க்கும்
நிகழ் குறியாம் சிவலிங்கம். திருத்தொண்டர் புராணம் - முதற்காண்டம் - திருமலைச் சருக்கம் – திருமலைச் சிறப்பு-36

என அருவத்துக்கும், உருவத்துக்கும் உள்ள கருத்தை வெளிப்படுத்துகிறார் சேக்கிழார்.

திருமூலர் திருமந்திரத்தில் அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவலிங்கம், ஆத்மலிங்கம்,ஞானலிங்கம், சிவலிங்கம் என லிங்கத்தின் சிறப்பினை விளக்குகின்றார். இவ்வுலகை உள்நோக்கி ஆராயும் போது ஓங்கி உயர்ந்த வானமே லிங்கம் என்றும், சுற்றுச் சூழ்ந்த அகன்றுள்ள என்திசையின் விரிவே ஆவுடை என்றும், பரந்து விரிந்துள்ள நிலப்பரப்பே பீடம் என்றும் கூறும்படி அமைந்திருந்தலை உணரலாம்.


கோவில் கலைகள் தமிழ் ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் பன்னாட்டு ஆய்விதழ்



**Tamil Journal of Temple Studies**
*An Internationally Peer-Reviewed Journal*
**E-ISSN: Applied** **Vol. 1: Issue - 1, November 2020**
**Available at:** https://tamiljournaloftemplestudies.wordpress.com/

கோயிலின் கருவறையின் மேல் உள்ள விமானம் தூலலிங்கம் என்றும், கருவறையின் உள்ளே இருப்பது சூக்மலிங்கம் என்றும் கூறப்படுகின்றன. லிங்கத்தின் அடிப்பகுதியாகி பீடம் ஓங்காரம் என்றும், நடுப்பகுதி கண்டம், மகாரம், உள்வட்டம் உகாரம், மேற்பகுதி அகாரம் என்றும் பிரணவம் எனும் மந்திரத்தின் அடையாளம் எனவும் குறிப்பிடப்படுகின்றன.

இதனையே திருமூலர்

> உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
> வள்ளற் பிரானுக்கு வாய் கோபுரவாயில்
> தெற்றத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
> கள்ளப் புலனைத்தும் காளா மணிவிளக்கே

என கோபுரவாயிலிலுள்ள கருவறையில் பிரதிட்டையோடு வீற்றிருக்கும் சிவலிங்கத்தைப் போற்றிப்பாடுகின்றார்.

சிவ வழிபாட்டில் ஆவுடையும் லிங்கமும் இணைந்த அருவுருவ வழிபாடானது அனைத்துக் சைவக் கோயில்களிலும் பின்பற்றப்படுகின்றன. அருவ வழிபாடானது லிங்கம் அல்லாமல் ஆவுடையை மட்டுமே கொண்டு வழிபடப்படும் முறையாகும். இவ்வழிபாட்டு முறையானது தமிழகத்தில் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள ஆவுடையார்கோயிலில் பின்பற்றப்படுகின்றன. இறைவன் ஆன்மநாதர் என்றும், இறைவி யோகாம்பிகை என்றும் அழைகப்பெற்று வருகின்றன. இங்கு சக்தி பீடமாகிய (ஆவுடை) பகுதி மட்டுமே இருக்கிறது. இக்கருவறையின் ஆவுடை சதுர வடிவமாக இரண்டரை அடி உயரத்தில் அமைந்துள்ளது. இந்த ஆவுடையின் பின்புறச் சுவரில் 27 நட்சத்திரத் தீபங்களும் அதற்கு மேல் சூரியன், சந்திரன், அக்னி என்ற மூன்று தீபங்களும் அமைந்துள்ளன. இறைவனுக்கு காட்டப்படும் தீபஜோதியைக் கூட தொட்டு வணங்குவதற்கு அனுமதிக் கிடையாது. ஏனென்றால் தீப ஒளியில் ஆத்மாவாக இறைவன் உள்ளார் என்ற ஐதீகத்தின் படி இம்முறைப் பின்பற்றப்படுகின்றது. இந்த ஆவுடையின் முன் அமுதபீடமும் அப்பீடத்தில் நிவேதனமான அன்னத்தின் ஆவியை மட்டுமே இறைவனுக்கு படைக்கப்பெறுகின்றன. மேலும் இக்கோயிலின் இறைவிக்குக் கூட பத்மபீடத்தில் பாதம் மட்டும் காட்டப்பட்டவாறு உருவமில்லாத அருவ வழிபாடு தான் பின்பற்றப்படுகின்றன. இறைவியின் வழிபாட்டினையும் மக்கள் நேரிடையாக

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020

Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

காண்பதரிது. காரணம் சிவனின் மீது அதிகப் பற்றுக் கொண்ட நால்வருள் ஒருவரான திருவாதவூரார் எனக் குறிப்பிடப்பெறும் மாணிக்கவாசகருக்கு மட்டுமே வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. இக்கோயிலில் நந்தி, பலிபீடம், கொடிமரம், துவாரப்பாலகர் கிடையாது இங்கு சிவனுக்குரிய அனைத்துமே மாணிக்கவாசகர் தான் என்பதுக் குறிப்பிடத்தக்கது. இறைவனுக்குரிய வழிபாடு, அபிஸேகம், விழா என்பதும் மாணிக்கவாசகருக்கு மட்டுமே நடத்தப்படுகின்றன. திருப்பெருந்துறை என்றுக் குறிப்பிடப்பெற்ற இவ்வூரின் பெயர் கூட மருவி கருவறையின் ஆவுடையை மையமிட்டு ஆவுடையார்கோயில் என தற்போது வரை அழைக்கப்பெற்று வருகின்றது. மாணிக்கவாசகரால் திருவாசகம் இயற்றப்பட்ட தலமாகவும் கருதப்படுகின்றது. இறைவன் ஆன்மாவாக தியானத்தில் ஆழ்ந்திருப்பதால் இக்கோயில் தெற்குத் திசைப் பார்த்தக் கோயிலாகவும் அமையப்பெற்றுள்ளது.

இதனையே மாணிக்கவாசகர்

அன்பருக்கு கண்பனே
யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே
தோன்றாப் பெருமையானே (திருப்பள்ளியெழுச்சி-2)

என திருவாசகத்தில் பாடியுள்ளார்

இக்கோயில் கல்வெட்டுகளில் இவ்வூர் மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றமாகவும் பவித்ரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்றும், மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றம் விறும தேசம் தனியூர் திருபெருந்துறையான பவித்ரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்றும், கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் குறிப்பிடப்படுகின்றன. இலக்கியங்களிலும் புராணங்களிலும் இவ்வூர் சிவபுரம், அநாதிமூர்த்தித்தலம், ஆதிகைலாயம், உபதேசத்தலம், குருந்தவனம், சதுர்வேதபுரம், ஞானபுரம், திருமூர்த்திபுரம், தட்சிணக் கைலாயப்புரம், தென்கயிலை, யோகவனம், யோகபீடபுரம் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலுமு; இக்கோயிலின் இறைவனின் பெயர் பவித்ரமாணிக்கச் சதுர்வேதிமங்கலத்து நாயனார் ஆளுடைய பரமசுவாமி என்றும், ஆளுடைய நாயனார் என்றும், இறைவி யோகநாயகி என்றும் குறிப்பிடப்பெறுகின்றன.

E-ISSN: Applied Vol. 1: Issue - 1, November 2020
Available at: https://tamiljournaloftemplestudies.wordpress.com/

**முடிவுரை**

சிவலிங்க வழிபாட்டின் தொன்மையானது பண்டைக்கால மக்களிடமிருந்தே வழக்கத்திலிருந்துள்ளன. சைவ சமயக் கோட்பாடுகளின் அடிப்படையில் அருவம், அருவுருவம், உருவம் என பிரித்து வகைப்படுத்தப்படும் வழிபாடுகளில் உருவமில்லாமல் வழிபடப்படும் அருவ வழிபாட்டு முறையானது சிறப்புக்குரிய ஒன்றாகும். இவ்வழிபாடு யோகத் தத்துவத்தின் கோட்பாடுகளை எடுத்துறைக்கும் விதமாக அமையப்பெற்றுள்ளன. மனதை ஒருநிலைப்படுத்தி இறைவனை நம்மனதில் உருவகப்படுத்திக் கொண்டு ஆன்மத் தத்துவத்தோடு வழிபடும் போது ஒரு மனநிம்மதியையும் மனவலிமையையும் அடையமுடிகின்றது. இப்படி ஒரு தத்ரூபமான வழிபாடு ஆவுடையார்கோயிலில் மட்டுமே பின்பற்றப்படுவதும் சிவனடியாரான மணிக்கவாசகருக்கு மட்டுமே உருவ வழிபாடு மேற்கொள்ளப்படுவதும் சிறப்புக்குரிய ஒன்றாகும்.

**நூற்பட்டியல்**

[1] Banerjee, J.N., Development of Hindu Iconography, Calcutta, 1956.
[2] Bhandarkar, R.G., Vaishnavism, Saivism and other Minor Religious Systems, Poona, 1913.
[3] Cunningham Alexandar (Ed.) Archaeological Survey of India, Indological Books House, Varanasi, 1972.
[4] David Kinsley, Hindu Goddess Visions of the Divine feminine in the Hindu Religious, Chennai.
[5] Davis, Richard H. (1992). Ritual in an Oscillating Universe: Worshipping Siva in Medieval India. Princeton, New Jersey: Princeton University Press. ISBN 9780691073866.
[6] Gopinatha Rao T.A. (1993). Elements of Hindu Iconography, Volume 1&2. Motilal Banarsidass. ISBN 978-81-208-0877-5.
[7] Kenoyer, Jonathan. (1998). *Ancient Cities of the Indus Valley Civilization.* Oxford, New York. Oxford University Press. 20-21
[9] Kramrisch, Stella (1988). The Presence of Siva. Delhi: Motilal Banarsidass. ISBN 9788120804913.
[10] Mahadev Chakravarti (1986). The Concept of Rudra-Śiva through the Ages. Motilal Banarsidass. ISBN 978-81-208-0053-3.
[11] Sivananda, Swami (1996). "Worship of Siva Linga". Lord Siva and His Worship. The Divine Life Trust Society.

